ශ්‍රී ලංකා විභාග දෙපාර්තමේන්තුව
இலங்கைப் பரீட்சைத் திணைக்களம்
Department of Examinations, Sri Lanka

අධ්‍යයන පොදු සහතික පත්‍ර (උසස් පෙළ) විභාගය, 2019 අගෝස්තු
கல்விப் பொதுத் தராதரப் பத்திர (உயர் தர)ப் பரீட்சை, 2019 ஓகஸ்ற்
General Certificate of Education (Adv. Level) Examination, August 2019

චිත්‍ර කලාව I
சித்திரக்கலை I
Art I

51 T I

07.08.2019 / 0830 – 1140

පැය තුනයි
மூன்று மணித்தியாலம்
*Three hours*

අමතර කියවීම් කාලය - මිනිත්තු 10 යි
மேலதிக வாசிப்பு நேரம் - 10 நிமிடங்கள்
Additional Reading Time - 10 minutes

**வினாப்பத்திரத்தை வாசித்து, வினாக்களைத் தெரிவுசெய்வதற்கும் விடை எழுதும்போது முன்னுரிமை வழங்கும் வினாக்களை ஒழுங்கமைத்துக் கொள்வதற்கும் மேலதிக வாசிப்பு நேரத்தைப் பயன்படுத்துக.**

**அறிவுறுத்தல்கள் :**

சுட்டெண் : ....................................

※ இவ்வினாத்தாள் **இரண்டு** பகுதிகளைக் கொண்டுள்ளது.

**பகுதி I**

- எல்லா வினாக்களுக்கும் **இவ்வினாத்தாளிலேயே** விடையளிக்குக.
- ஒவ்வொரு வினாவுக்குமுரிய சரியான விடையைத் தெரிவுசெய்து அதன் **இலக்கத்தை** எதிரே உள்ள **புள்ளிக்கோட்டின்மீது** எழுதுக.

**பகுதி II**

- மூன்று உப பகுதிகளைக் கொண்டது.
- **'அ'** பகுதியிலிருந்து எவையேனும் **இரண்டு** வினாக்களையும் **'ஆ'**, **'இ'** ஆகிய ஒவ்வொரு பகுதியிலிருந்தும் ஒரு வினா வீதமும் தெரிவுசெய்து **நான்கு** வினாக்களுக்கு விடை எழுதுக.

※ பகுதி **I**, பகுதி **II** ஆகியவற்றின் விடைத்தாள்களை ஒன்றாக இணைத்துக் கையளிக்குக.

| பரீட்சகரின் உபயோகத்திற்கு மட்டும் | |
|---|---|
| வினாத்தாள் I | |
| பகுதி | புள்ளி |
| I | |
| II | |
| மொத்தம் | |
| 1ஆம் பரீட்சகர் | 2ஆம் பரீட்சகர் |
| | |

## பகுதி I

● **1** தொடக்கம் **5** வரையான ஒவ்வொரு வினாவுக்கும் **மிகப் பொருத்தமான விடையை A, B, C, D, E** எனப் பெயரிடப்பட்டுள்ள செதுக்கல்களைக் கொண்ட பின்வரும் படங்களிலிருந்து தெரிவுசெய்க.


A


B


C


D


E

**1.** **A** எழுத்தினால் காட்டப்பட்டுள்ள மரச்செதுக்கலைக் காணக்கிடைப்பது,
(1) குருநாகலிற்கு அண்மையில் காணப்படும் அம்பலத்திலாகும்.
(2) எம்பக்க தேவாலயத்திலாகும்.
(3) வயல்வெளியொன்றில் தூணொன்றின்மீது அமைந்துள்ள விகாரையிலாகும்.
(4) இறைவனுக்கான பூஜைகள் நடாத்தப்படும் கோயிலொன்றிலாகும்.
(5) பனாவிட்டிய பிரதேசத்திலுள்ள அம்பலத்திலாகும். (.........)

**2.** **B** எழுத்தினால் காட்டப்பட்டுள்ளது,
(1) யாப்பகூவ அரண்மனையின் மண்டபத்திலுள்ள பாதச் சட்டகத்தில் காணத்தக்க கற்றகட்டுச் செதுக்கலாகும்.
(2) கண்டி தலதா மாளிகையின் படிக்கட்டுகளின் இருபுறமும் காணத்தக்க செதுக்கலாகும்.
(3) யாப்பகூவ தலதா மாளிகையின் அடித்தளத்தின் நிரல்களுக்கிடையில் காணப்படும் நடனமாடும் உருவங்களைக் கொண்ட சட்டகமாகும்.
(4) கடலாதெனிய விகாரையின் அடித்தளத்திலுள்ள நடனமாடும், வாத்தியங்களை இசைக்கும் பெண்ணுருவங்களின் தொகுதியாகும்.
(5) வனப்புமிகு தன்மை கொண்ட நடன மாதர்களுடன் கூடிய யாப்பகூவ சட்டகச் செதுக்கலாகும். (.........)

**3.** **C** எழுத்தினால் காட்டப்பட்டுள்ள பாரூத் செதுக்கலினால் சித்திரிக்கப்படுவது,
(1) பெண்ணொருவரின் சுயசரிதை ஆகும்.
(2) புத்தபகவானின் வாழ்க்கைச் சரிதமாகும்.
(3) ஜாதகக் கதையொன்றாகும்.
(4) மகாமாயாதேவியின் கனவாகும்.
(5) புத்தருடைய வாழ்க்கைச் சம்பவமொன்றாகும். (.........)

**4.** **D** எழுத்தினால் காட்டப்பட்டுள்ள செதுக்கல்,
(1) இந்தியாவின் எல்லோராவில் காணக்கிடைப்பதாகும்.
(2) இந்தியாவின் கடற்கரையோர கற்பாறையொன்றில் மென்புடைப்பாகச் செதுக்கப்பட்டுள்ளதாகும்.
(3) கங்கை நதியின் தோற்றத்தைக் குறிக்கும் விதத்தில் மகாபலிபுரக் கடற்கரையோர கற்பாறையில் செதுக்கப்பட்டுள்ளதாகும்.
(4) நிலையான கற்பாறையொன்றில் செதுக்கப்பட்ட கற்பனைக் கதையாகும்.
(5) இறைவன், மனித, விலங்கு உருவங்களைக் கொண்டதாக கற்பாறையொன்றில் செதுக்கப்பட்டுள்ளதாகும். (.........)

**5.** **E** எழுத்தினால் காட்டப்பட்டுள்ள தூண் செதுக்கலினால் சித்திரிக்கப்படுவது,
(1) கிரேக்கர்கள் தமது யுத்த வெற்றிகளைக் கொண்டாடுதலாகும்.
(2) உரோமர்கள் தமது யுத்த வெற்றிகளைக் கொண்டாடுதலாகும்.
(3) உரோமர்களுக்கும் கிரேக்கர்களுக்கும் இடையிலான யுத்தக் காட்சிகளாகும்.
(4) உரோமப் பேரரசனின் வாழ்க்கைத் தகவல்களாகும்.
(5) உரோமர்கள், டேசியர்களுக்கு எதிராகப் போர்செய்த காட்சியாகும். (.........)

- 6 தொடக்கம் 10 வரையான ஒவ்வொரு வினாவுக்கும் **மிகப் பொருத்தமான விடையை** 1 தொடக்கம் 8 வரையில் பெயரிடப்பட்டுள்ள பின்வரும் ஓவியப் பகுதிகளிலிருந்து தெரிவுசெய்க.


1


2


3


4


5


6


7


8

**6.** செதுக்கல் கோட்டமைப்பில் (Engraving) பூரணப்படுத்தப்பட்ட ஓவியம் எது?
(1) 1 (2) 2 (3) 3 (4) 4 (5) 7 (.........)

**7.** எதிரச்சு (Negative print) நுட்பமுறையில் வரையப்பட்ட ஓவியம் எது?
(1) 2 (2) 3 (3) 4 (4) 5 (5) 7 (.........)

**8.** லாஸ்கோ குகையில் காணக்கிடைக்கும் ஓவியங்கள் யாவை?
(1) 1, 2 (2) 4, 6 (3) 6, 7 (4) 6, 8 (5) 7, 8 (.........)

**9.** வர்ணம் தீட்டல் முறையைப் பயன்படுத்தி நிர்மாணிக்கப்பட்ட இலங்கைக் குகை ஓவியங்கள் யாவை?
(1) 1, 2, 3 (2) 2, 3, 5 (3) 2, 3, 7 (4) 2, 5, 7 (5) 3, 5, 7 (.........)

**10.** இலங்கையின் வரலாற்றுக்கு முற்பட்ட கால ஓவியங்கள் யாவை?
(1) 1, 2, 4, 5 (2) 1, 3, 5, 7 (3) 1, 5, 7, 8 (4) 2, 4, 6, 7 (5) 3, 4, 5, 6 (.........)

● **11** தொடக்கம் **15** வரையான ஒவ்வொரு வினாவுக்கும் **மிகச் சரியான விடையை F, G, H, I, J** எனப் பெயரிடப்பட்டுள்ள பின்வரும் ஓவியங்களிலிருந்து தெரிவுசெய்க.


F


G


H


I


J

**11.** F எழுத்தினால் காட்டப்பட்டுள்ள ‘சீத்தா டி சேரம்’ என்ற ஓவியம்,
(1) தனிநபர் வாதத்தை அடிப்படையாகக் கொண்டு நிர்மாணிக்கப்பட்டதாகும்.
(2) கீழைத்தேய கலை நியதிகளைப் பின்பற்றி நிர்மாணிக்கப்பட்டதாகும்.
(3) மனப்பதிவுவாத கலைப் பண்புகளை அடிப்படையாகக் கொண்டதாகும்.
(4) பின்மனப்பதிவுவாத ஓவிய மரபின் பண்புகளைச் சித்திரிப்பதாகும்.
(5) சாஸ்திராலய யதார்த்தவாத ஓவிய மரபுக்கமைய வரையப்பட்டதாகும். (.........)

**12.** G எழுத்தினால் காட்டப்பட்டுள்ள இந்திய ஓவியத்தை வரைந்தவர் யார்?
(1) ஐரோப்பிய சாஸ்திராலயப் பண்புகளைப் பயன்படுத்தாத ராஜா ரவிவர்மா ஆவார்.
(2) இந்தியப் பண்புகளை அடிப்படையாகக் கொண்டு வரைந்த நந்தலால் போஸ் ஆவார்.
(3) ஐரோப்பிய பின்மனப்பதிவுவாத செல்வாக்கிற்குட்பட்ட அம்ரிதா சேர்கில் ஆவார்.
(4) ஐரோப்பிய யதார்த்தவாதத்துக்கு எதிராக ஓவியங்களை வரைந்த அபனீந்திரநாத் தாகூர் ஆவார்.
(5) இந்திய கிராமியக் கலை மரபுகளின் செல்வாக்குக்குட்பட்ட ஜெமினிறோய் ஆவார். (.........)

**13.** H எழுத்தினால் காட்டப்பட்டுள்ள ‘சூரசம்ஹாரம்’ என்ற ஓவியம் பற்றிய **பொருத்தமற்ற** கூற்று யாது?
(1) மேலைத்தேய கலைமரபிற்கமைய முப்பரிமாண இயல்புகளைக் காட்டும் விதத்தில் வர்ணமிடப்பட்டுள்ளது.
(2) கீழைத்தேய கலைப் பண்புகளைக் கொண்டதாக கதைகூறும் பாணியிலிருந்து வேறுபட்ட விதத்தில் சித்திரிக்கப்பட்டுள்ளது.
(3) சாஸ்திராலய யதார்த்தவாதக் கலைப் பண்புகளைக் கோயில் ஓவியக்கலையில் இணைப்பதற்கான முயற்சி மேற்கொள்ளப்பட்டுள்ளது.
(4) ராஜா ரவிவர்மாவின் கலைப் பண்புகளின் செல்வாக்குக்குட்பட்டுள்ளது.
(5) ஆங்கில-இந்திய மரபுரீதியான பண்புகளுக்கமைய வரையப்பட்டுள்ளது. (.........)

**14.** I எழுத்தினால் காட்டப்பட்டுள்ள ‘எட்கா டெகாவின்’ ஓவியம்,
(1) உடலமைப்புக்கும் ஒளிக்குமான இடைத்தொடர்பை அவதானித்து வரையப்பட்டதாகும்.
(2) பண்டைய ஒழுங்கமைப்பு முறையியல்களிலிருந்து விடுபட்டு வரையப்பட்டதாகும்.
(3) சமகால சம்பவமொன்றை அடிப்படையாகக் கொண்டுள்ளது.
(4) வெப்ப, குளிர் வர்ணங்களைக் கொண்டு நிர்மாணிக்கப்பட்டுள்ளது.
(5) மனப்பதிவுவாதத்தில் காணப்பட்ட எல்லைகளைக் கடந்த விதத்தில் நிர்மாணிக்கப்பட்டுள்ளது. (.........)

**15.** J எழுத்தினால் காட்டப்பட்டுள்ள ஓவிய நிர்மாணிப்பின்போது ‘வின்சன்ட் வான்கோ’ பயன்படுத்தியுள்ள நுட்பமுறை
(1) ஒன்றுக்கொன்று எதிரான வர்ணங்களை ஓவியத் தளத்தின்மீது ஒருங்கிணைப்புச் செய்தல்
(2) அழுத்தமான, குறுகிய தூரிகைத் தடங்களின் மூலம் லயத்தையும் அசைவையும் காட்டுதல்
(3) இரவு வானின் அமைதியான தன்மையை ஒழுங்காகக் காட்டுதல்
(4) ஒன்றுகொன்று எதிரான வர்ணங்கள் பொருந்திச் சேரும் விதத்தில் வானத்தைச் சித்திரித்தல்
(5) யதார்த்த நிலைமைக்குப் பதிலாக உணர்வு பூர்வமானதொரு எண்ணத்தை ஓவியமாக்கல் (.........)

● **16** தொடக்கம் **20** வரையான ஒவ்வொரு வினாவுக்கும் **மிகச் சரியான விடையை K, L, M, N, O** எனப் பெயரிடப்பட்டுள்ள பின்வரும் சிலைகளிலிருந்து தெரிவுசெய்க.


K


L


M


N


O

**16.** **K** எழுத்தினால் காட்டப்பட்டுள்ள சிலை,
(1) பொலன்னறுவை கல்விகாரை சிலைகளுள் ஒன்றாகும்.
(2) பொலன்னறுவையின் மகாயான பௌத்தமதப் பிரிவின் பண்புகளை எடுத்துக்காட்டுவதாகும்.
(3) பல்லவர்களின் செல்வாக்குடன் கல்விகாரையின் பாறையொன்றைக் குடைந்து செதுக்கப்பட்டதாகும்.
(4) கூம்பு வடிவ ஒளிக்கீற்றுகளைக் கொண்ட கல்விகாரைச் சிலைகளுள் ஒன்றாகும்.
(5) கல்விகாரையில் கற்பாறையைக் குடைந்து நிர்மாணிக்கப்பட்ட வித்தியாதரக் குகையில் காணத்தக்கதாகும். (.........)

**17.** **L** எழுத்தினால் காட்டப்பட்டுள்ள சிலைகளின் தொகுதி,
(1) சிவனும் பார்வதியும் நாயனாரொருவருடன் இருக்கும் விதத்தைச் சித்திரிக்கும் இந்துசமயச் சார்புடைய உலோக வார்ப்பு நிர்மாணிப்பாகும்.
(2) மலைக்குமரனையும் பரிவாரங்களையும் கொண்ட இந்துசமயக் கதையொன்றைச் சித்திரிப்பதாகும்.
(3) பொலன்னறுவை சிவன் கோயிலிலிருந்து கண்டுபிடிக்கப்பட்ட வெண்கல வார்ப்புச் சிலையாகும்.
(4) சிவன், பார்வதி, மலைக்குமரன் ஆகியோரைச் சித்திரிக்கும் இது, சோமஸ்கந்தர் எனப்படும்.
(5) இலங்கையின் வார்ப்புக்கலை முறைமையின் உன்னதத் தன்மையை எடுத்துக்காட்டும் நிர்மாணிப்பாகும். (.........)

**18.** **M** எழுத்தினால் காட்டப்படுவது,
(1) சிந்துவெளியில் கண்டெடுக்கப்பட்ட மண்ணாலானதொரு சிலையாகும்.
(2) சமய மரபுகள், நம்பிக்கைகளை அடிப்படையாகக் கொண்ட கற்பனைச் சிலையாகும்.
(3) சிந்துவெளியில் கண்டெடுக்கப்பட்ட தாய்த் தேவதையைச் சித்திரிக்கும் சுடுமண் சிலையாகும்.
(4) சிந்துவெளியில் கண்டெடுக்கப்பட்ட மொசபத்தேமிய சுடுமண் சிலையாகும்.
(5) அடிப்படைக் கலைப் பண்புகளைச் சித்திரிக்கும் எண்ணக்கரு ரீதியானதொரு சிலையாகும். (.........)

**19.** **N** எழுத்தினால் காட்டப்படுவது,
(1) காந்தார பௌத்த கலையின் ஆரம்ப காலத்தில் நிர்மாணிக்கப்பட்ட புத்தர் சிலையாகும்.
(2) தர்மத்தைப் போதிக்கும் விதத்தில் செதுக்கப்பட்ட 'ஹோட்டிமந்தார்' சிலையாகும்.
(3) காந்தார நிர்மாணிப்பின் யதார்த்தப் பண்புகளைச் சித்திரிக்கும் 'தக்னீபகீ' சிலையாகும்.
(4) காந்தார தேசத்தில் பிரேகம் என்ற இடத்தில் கண்டெடுக்கப்பட்ட புத்தர் சிலையாகும்.
(5) மேலைத்தேய கலைஞர்கள் இந்திய மரபுகளுக்கமைய செதுக்கிய சிலையாகும். (.........)

**20.** **O** எழுத்தினால் காட்டப்படுவது,
(1) ஹெலனிஸ்டிக் யுகத்தில் உருவான வெற்றியின் தேவதை என்ற சிலையாகும்.
(2) சிறகுகளைக் கொண்ட தேவதையொன்றைச் சித்திரிக்கும் கிரேக்க சிலையாகும்.
(3) மிக நுட்பமான விதத்தில் உடற்பாகங்களையும் உடைகளையும் சிலையாக வடித்த உரோமானியச் சிலையாகும்.
(4) வெற்றியைக் கொண்டாடும் தேவதையொன்றின் உடற் கொண்ணிலையைச் சித்திரிக்கும் சிலையாகும்.
(5) கிரேக்கத்தில் விளையாட்டுக்கு அதிபதியான தேவதையின் சிலையாகும். (.........)

● **21** தொடக்கம் **25** வரையான ஒவ்வொரு வினாவுக்கும் **மிகப் பொருத்தமான விடையைத்** தெரிவுசெய்க.

**21.** ஏதேனும் பணியொன்றை மேற்கொள்ளும் நிறுவனமொன்றுக்குப் பொருத்தமான இலச்சினையொன்றை நிர்மாணிக்கும்போது,
(1) அதிக அலங்காரத் தோற்றத்தைக் கொண்டதாக வடிவங்களையும் வர்ணங்களையும் பயன்படுத்துதல் முக்கியமாகும்.
(2) கவர்ச்சிகரமான தன்மையையும் சிறந்த பூரணப்பாட்டையும் கொண்டிருத்தல் வேண்டும்.
(3) கிரபிக் கலைக் கோட்பாடுகளுக்கமைவானதாக இருத்தல் வேண்டும்.
(4) கருத்து வெளிப்படும் விதத்தில் குறியீட்டடிப்படையில் வடிவங்களையும் வர்ணங்களையும் பயன்படுத்துதல் வேண்டும்.
(5) சுவரொட்டிச் சாயத்தை இருபரிமாண முறையில் பயன்படுத்துதல் வேண்டும். (.........)

**22.** ஏதேனுமொரு கருப்பொருளை அரூப நோக்கில் ஒருங்கிணைக்கும்போது கவனம் செலுத்தவேண்டியது,
(1) யதார்த்தபூர்வமான தொகுப்புக் கோட்பாடுகளைப் பயன்படுத்துவதிலாகும்.
(2) வர்ணங்களை இருபரிமாண அடிப்படையில் பயன்படுத்துவதிலாகும்.
(3) வடிவங்களின் ஒழுங்கமைப்பின்போது உயிர்ப்பான கோடுகளைப் பயன்படுத்துவதிலாகும்.
(4) கருப்பொருளுக்குப் பொருத்தமான விதத்தில் ஆக்கபூர்வமான வடிவங்களைப் பயன்படுத்துவதிலாகும்.
(5) பயன்படுத்தும் பாணிக்கு இணக்கமான கோடுகள், வடிவங்கள், வர்ணங்கள் ஆகியவற்றைப் பயன்படுத்துவதிலாகும். (.........)

**23.** வீட்டு அலங்கரிப்புக்காக கழிவுப் பொருட்களைப் பயன்படுத்தி, சிலையொன்றை நிர்மாணிக்கும்போது கவனத்திற் கொள்ளவேண்டியது,
(1) விசித்திரமான தன்மையையும் வனப்புமிகு தன்மையையும் பேணுவதில் ஆகும்.
(2) நுகர்வோரின் விருப்பங்களுக்கேற்றவாறு முழுமைப்படுத்தலை ஆகும்.
(3) மூலப்பொருட்களைத் தமது விருப்பத்திற்கேற்ப பயன்படுத்தலை ஆகும்.
(4) மூலப்பொருட்களின் இயல்புகளைவிட நிர்மாணத்தின் தேவையை ஆகும்.
(5) பயன்பாட்டிற்கு எடுக்கும் மூலப்பொருட்களின் தன்மைகளையாகும். (.........)

**24.** கட்புலக் கலையின் யதார்த்தச் சித்திரிப்பு (Realism) என்பது,
(1) சாஸ்திராலய அடிப்படை விதிகளைப் பின்பற்றுதலாகும்.
(2) தூரதரிசனக் கோட்பாடுகளைச் சரியாகப் பயன்படுத்துதலாகும்.
(3) விருத்தியுற்ற அழகியல் கோட்பாடுகளுக்கமைய மனித உருவங்களைச் சித்திரித்தலாகும்.
(4) இயற்கையில் காணப்படும் உயிருள்ள, உயிரற்றவற்றின் பண்புகளை உள்ளவாறே சித்திரித்தலாகும்.
(5) அழகியல் கோட்பாடுகளுக்கமைய அனைத்தையும் சித்திரித்தலாகும். (.........)

**25.** கணினியொன்றின் துணையுடன் அழைப்பிதழ் ஒன்றை நிர்மாணிக்கும்போது அத்தியாவசியமானது,
(1) அடிப்படை மாதிரியை வர்ண ஓவியமொன்றாக வரைந்து கொள்ளலாகும்.
(2) கிரபிக் நிர்மாணிப்புகளுக்குப் பொருத்தமான மென்பொருளொன்றைத் தெரிவுசெய்வதும் அதன் பயன்பாடு பற்றிய அறிவுமாகும்.
(3) நிர்மாணிப்புக்குத் தேவையான வரைபடங்களையும் எழுத்துக்களையும் தெரிவுசெய்தலாகும்.
(4) கருத்து வெளிப்பாடு ஏற்படும் விதமாக கணினியில் புதிய மாதிரியொன்றைக் கட்டியெழுப்பிக் கொள்ளலாகும்.
(5) அழைப்பிதழின் பிரதியொன்றைக் கணினிக்கு உள்ளீடு செய்து மேலதிக பிரதிகளைப் பெற்றுக்கொள்ளலாகும். (.........)

● **26** தொடக்கம் **30** வரையான ஒவ்வொரு வினாவுக்கும் **மிகச்சரியான விடையைத்** தெரிவுசெய்க.

**26.** கம்பளைக் காலத்தில் காணக்கிடைக்கும் பௌத்த கட்டக்கலை நிர்மாணிப்புகளினால் எடுத்துக்காட்டப்படுவது,
(1) தென்னிந்திய பல்லவ கட்டடக்கலைப் பண்புகளாகும்.
(2) விகாரையின் உட்புறத்தைவிட வெளிப்புறச் சுவர்களை அலங்கரிப்பதில் அதிக அக்கறை செலுத்தப்பட்டுள்ளமையாகும்.
(3) திராவிடக் கலைஞர்களினால் பயன்படுத்தப்பட்ட இந்து கட்டடக்கலைப் பண்புகளாகும்.
(4) பொலன்னறுவையில் காணக்கிடைக்கும் இந்து கட்டடக்கலைப் பண்புகளாகும்.
(5) தென்னிந்திய விஜயநகர கட்டடக்கலைப் பண்புகளாகும். (.........)

**27.** பின்வருவனவற்றுள் கண்டிக் கால கலைஞர்கள் பற்றிய சரியான கூற்று எது?
(1) நீலகம ஓவியப் பரம்பரைக் கலைஞர்களால் தம்புள்ள விகாரையின் ஓவியங்கள் வரையப்பட்டுள்ளன.
(2) கண்டிய ஓவியங்கள் பலவற்றை சித்திர நைத்தே என்ற கலைஞரே வரைந்துள்ளார்.
(3) தெகல்தொருவ விகாரையின் அனைத்து ஓவியங்களையும் தெவரகம்பொல சில்வத்தன என்ற கலைஞர் வரைந்துள்ளார்.
(4) தேவேந்திர மூலாச்சாரி கட்டடக்கலையைவிட ஓவியக்கலையில் கைத்தேர்ந்தவராவார்.
(5) தெல்மட மூலாச்சாரியார் கண்டிக் காலத்தில் வாழ்ந்த அதிசிறந்த ஓவியராவார். (.........)

**28.** காந்தார தேசத்தில் உருவான மதுரா கலையானது,
(1) மேலைத்தேய கலைச் செல்வாக்கினால் உருவானதாகும்.
(2) கிரேக்க, பௌத்த கலப்பு மரபாகும்.
(3) தேசியத்துவத்தை எடுத்துக்காட்டும் கலை மரபாகும்.
(4) கனிஸ்க மன்னனால் அறிமுகப்படுத்தப்பட்டதாகும்.
(5) மகாயான பௌத்த சிந்தனைக்கமைய உருவானதாகும். (.........)

**29.** புத்தபகவான் தர்மபோதனை நடத்திய இடத்தினை நினைவுகூரும்முகமாக உருவாக்கப்பட்ட அசோக மன்னனின் நிர்மாணிப்பு எது?
(1) லௌரிய நந்தன்கர் தூணாகும். (2) ராம்பூர்வாத் தூணாகும்.
(3) சாஞ்சித் தூணாகும். (4) சாராநாத் தூணாகும்.
(5) ரும்மிந்தாய் தூணாகும். (.........)

**30.** கனவடிவவாதத்துக்கு அடிப்படையாக அமைந்தது,
(1) கலைப் படைப்பினூடாக ஏற்படும் உணர்வு வெளிப்பாடாகும்.
(2) வர்ணப் பயன்பாட்டின் வரையறைகளை மீறிச் செல்லலாகும்.
(3) பொருள்களில் மறைந்திருக்கும் அடிப்படை கேத்திர கணித வடிவங்களைக் கண்டறிவதாகும்.
(4) கற்பனை உலகுக்கும் யதார்த்தத்துக்கும் இடையிலான இடைத்தொடர்பைக் கண்டறிவதாகும்.
(5) முப்பரிமாணம், ஒளி, இருள் ஆகியவற்றைச் சித்திரிக்கும் முயற்சியாகும். (.........)

● **31** தொடக்கம் **35** வரையான ஒவ்வொரு வினாவுக்கும் **மிகப் பொருத்தமான விடையை** அதற்கு முன்னாலுள்ள கட்டடக்கலை நிர்மாணிப்புகளை அடிப்படையாகக்கொண்டு தெரிவுசெய்க.

**31.** இங்கு காட்டப்பட்டுள்ள கட்டடக்கலை நிர்மாணிப்பானது,



(1) இலங்கையில் காணக்கிடைக்கும் அதிசிறந்த தூபிமனையாகும்.
(2) பொலன்னறுவை தலதா மாளிகையில் உள்ள தூபிமனையாகும்.
(3) திரியாய பிரதேசத்தில் அமைந்துள்ள தூபிமனையாகும்.
(4) நிஸ்ஸங்கமல்ல மன்னனால் நிர்மாணிக்கப்பட்ட தூபிமனையாகும்.
(5) கற்றளமொன்றின் மீது அமைக்கப்பட்டுள்ள மெதிரிகிரிய தூபிமனையாகும். (.........)

**32.** இங்கு காட்டப்பட்டுள்ள நீர்த்தடாகம் அமைக்கப்பட்டது,



(1) திசாவாவியின் ஏரிப்பகுதியில் உள்ள பூங்காவொன்றிலாகும்.
(2) அதிசிறந்த கலைப்பண்புகளைச் சித்திரிக்கும் ரன்மசு பூங்காவிலாகும்.
(3) இசுறுமுனிய விகாரையிலாகும்.
(4) தேவநம்பியதீசனால் அரச பரம்பரையினருக்காகவாகும்.
(5) அபயகிரி விகாரைப் பிரதேசத்திலாகும். (.........)

**33.** இங்கு காட்டப்பட்டுள்ள கோயில்,



(1) இரண்டு சிகரங்களைக் கொண்டதாக மகாபலிபுரக் கடற்கரையில் அமைக்கப்பட்டதாகும்.
(2) மாலுமிகள் கடலில் இருந்தவாறே வழிபடத்தக்க விதத்தில் அமைக்கப்பட்டதாகும்.
(3) பல்லவர்களின் கலைப் பண்புகளுக்மைய மகாபலிபுரக் கடற்கரையில் அமைக்கப்பட்டதாகும்.
(4) மகாபலிபுரக் கடற்கரையில் ஒன்றுக்கொன்று அருகில் அமைக்கப்பட்டதாகும்.
(5) பல்லவர்களின் இராசதானிக் காலத்தில் சோழர்களால் அமைக்கப்பட்டதாகும். (.........)

**34.** நைல் நதிக்கரையில் காணத்தக்க இது,



(1) இரண்டாம் ரமேசஸ் மன்னனால் அமைக்கப்பட்ட லக்சோர் தேவாலயமாகும்.
(2) மலையைக் குடைந்து அமைக்கப்பட்ட இரண்டாம் ரமேசஸ் மன்னனின் அபுசிம்பல் தேவாலயமாகும்.
(3) எகிப்திய மரபுரீதியான பல சிலைகளைக் காணத்தக்கதாயுள்ள தேவாலயமாகும்.
(4) தனது யுத்த வெற்றிகளை நினைவுகூரும்முகமாக ரமேசஸ் மன்னனால் அமைக்கப்பட்ட எட்பூ தேவாலயமாகும்.
(5) அஸ்வான் சமவெளியில் நீரில் மூழ்கி அழிவுற்ற அபுசிம்பல் தேவாலயமாகும். (.........)

**35.** இங்கு காட்டப்பட்டுள்ளது,



(1) சிந்துவெளியில் காணக்கிடைக்கும் செங்கற்களினால் அமைக்கப்பட்ட தானியக் களஞ்சியமாகும்.
(2) இந்திய பல்லவ ராசதானியின் அரச பரம்பரையினருக்காக அமைக்கப்பட்ட நீர்த்தடாகமாகும்.
(3) சிந்துவெளியில் காணக்கிடைக்கும் நீரவழங்கல் முறைமையின் தலைமையகமாகும்.
(4) ஹரப்பாவில் நீரைப்பெற பயன்படுத்தப்பட்டதொரு இடமாகும்.
(5) சிந்துவெளி நாகரிகத்தில் காணக்கிடைக்கும் நீர்த்தடாகமாகும். (.........)

- **36** தொடக்கம் **40** வரையான ஒவ்வொரு வினாவுக்கும் **மிகச் சரியான விடையை** பின்வரும் ஓவியத்தைப் பயன்படுத்தி தெரிவுசெய்க.



**36.** இவ் ஓவியத்தை வரைந்தவர்,
(1) 43 ஆம் குழுக் கலைஞரான மஞ்சுஸ்ரீ ஆவார்.
(2) மேலைத்தேய கலைப்பாணியில் விகாரை ஓவியங்களை வரைந்த எம். சார்லிஸ் ஆவார்.
(3) விகாரை ஓவியக்கலையில் மாற்றத்தை ஏற்படுத்தியவரான ஜோர்ஜ் கீற் ஆவார்.
(4) கீழைத்தேய கலைமரபைப் பின்பற்றிய சோலியஸ் மெண்டிஸ் ஆவார்.
(5) ஓவியக்கலையில் நவீன புரட்சியை ஏற்படுத்திய சோமபந்து வித்யாபதி ஆவார். (.........)

**37.** இவ்வோவியத்தின் மூலம் சித்திரிக்கப்படுவது,
(1) சித்தார்த்தரின் திருமண நிச்சயதார்த்தமாகும்.
(2) சுத்தோதன அரசனின் மாளிகையில் இடம்பெற்ற திருமண வைபவமாகும்.
(3) சுத்தோதன அரசன், மகாமாயாதேவி ஆகியோரின் திருமண வைபவமாகும்.
(4) சித்தார்த்தர், யசோதரை ஆகியோரின் திருமணமாகும்.
(5) அரண்மனையொன்றில் இடம்பெற்ற திருமண வைபவமொன்றாகும். (.........)

**38.** இவ்வோவியத்தில்,
(1) இயற் தோற்ற வடிவங்கள் ஒருங்கிணைக்கப்பட்டுள்ளன.
(2) சித்திரிப்பானதும் கலைப்பாங்கானதுமான வடிவங்கள் அர்த்தபுஷ்டியாகப் பயன்படுத்தப்பட்டுள்ளன.
(3) அரூபரீதியானதும் யதார்த்த பூர்வமானதுமான வடிவங்கள் ஆக்கபூர்வமாகப் பன்படுத்தப்பட்டுள்ளன.
(4) ஐரோப்பிய இயற்கைவாத ஓவிய மரபின் பண்புகள் பின்பற்றப்பட்டுள்ளன.
(5) வெளிப்பாட்டுரீதியான ஓவிய மரபின் பண்புகள் சிறப்பாகப் பயன்படுத்தப்பட்டுள்ளன. (.........)

**39.** இவ்வோவிய நிர்மாணிப்பின்போது கலைஞர் பின்பற்றியுள்ளது,
(1) றிச்சர்ட் ஹென்றிக்கஸ்சின் ஐரோப்பிய முறையியலாகும்.
(2) ரபாயலின் மறுமலர்ச்சிக் கலையின் பண்பாகும்.
(3) போல் செசானின் பின்மனப்பதிவுவாதப் பண்பாகும்.
(4) க்ளோட் மொனேயின் இல்லற வாழ்வை அடிப்படையாகக் கொண்ட முறையியலாகும்.
(5) அசைவுடன் கூடிய சந்தர்ப்பங்களை சித்திரிக்கும் எட்கா டெகாவின் முறையியலாகும். (.........)

**40.** இவ்வோவியத்தின் கட்புல வெளிப்பாடாக அமைவது,
(1) சம்பவச் சித்திரிப்பின் மூலம் எடுத்துக்காட்டப்படும் அரச மாளிகையொன்றின் அலங்கரிப்புத் தன்மையாகும்.
(2) சமயச் சம்பவமொன்றைச் சித்திரிப்பதைவிட லௌகீகத்தன்மை காட்டப்பட்டுள்ளமையாகும்.
(3) விபரமான சித்திரிப்பும் இந்திய சமூகப் பண்புகளும் ஆகும்.
(4) அரச பரம்பரையினரின் மரபுரீதியான சம்பிரதாயங்கள் கம்பீரமாக வெளிக்காட்டப்பட்டுள்ளமையாகும்.
(5) மனித உரு, ஆடையணிகலன்கள் ஆகியவற்றில் வெளிநாட்டுப்பாங்கொன்று வெளிப்படுத்தப் பட்டுள்ளமையாகும். (.........)

ශ්‍රී ලංකා විභාග දෙපාර්තමේන්තුව
இலங்கைப் பரீட்சைத் திணைக்களம்

අ.පො.ස. (උ.පෙළ) විභාගය/ க.பொ.த. (உயர் தர)ப் பரீட்சை - 2019

නව නිර්දේශය/ புதிய பாடத்திட்டம

| විෂය අංකය<br>பாட இலக்கம் | 51 | විෂයය<br>பாடம் | சித்திரம் |
|---|---|---|---|

## ලකුණු දීමේ පටිපාටිය/புள்ளி வழங்கும் திட்டம்

## I පත්‍රය/பத்திரம் I

| ප්‍රශ්න අංකය<br>வினா இல. | පිළිතුරු අංකය<br>விடை இல. | ප්‍රශ්න අංකය<br>வினா இல. | පිළිතුරු අංකය<br>விடை இல. | ප්‍රශ්න අංකය<br>வினா இல. | පිළිතුරු අංකය<br>விடை இல. | ප්‍රශ්න අංකය<br>வினா இல. | පිළිතුරු අංකය<br>விடை இல. |
|---|---|---|---|---|---|---|---|
| 01. | 5 | 11. | 5 | 21. | 4 | 31. | 5 |
| 02. | 3 | 12. | 3 | 22. | 5 | 32. | 2 |
| 03. | 4 | 13. | 3 | 23. | 4 | 33. | 3 |
| 04. | 3 | 14. | 1 | 24. | 4 | 34. | 2 |
| 05. | 5 | 15. | 2 | 25. | 4 | 35. | 5 |
| 06. | 1 | 16. | 5 | 26. | 3 | 36. | 2 |
| 07. | 1 | 17. | 4 | 27. | 1 | 37. | 4 |
| 08. | 4 | 18. | 3 | 28. | 3 | 38. | 4 |
| 09. | 5 | 19. | 3 | 29. | 4 | 39. | 1 |
| 10. | 2 | 20. | 1 | 30. | 3 | 40. | 2 |

✪ විශේෂ උපදෙස්/ விசேட அறிவுறுத்தல் :

එක් පිළිතුරකට/ ஒரு சரியான விடைக்கு 01 ලකුණු බැගින්/புள்ளி வீதம்

මුළු ලකුණු/மொத்தப் புள்ளிகள் 1 × 40 = 40

## பகுதி 'அ'

## (சித்திரக்கலையின் மதிப்பீடும் இரசனையும் - இலங்கை)

**1.** இலங்கையின் விகாரைச் சுவரோவியக் கலையின் திருப்புமுனையாக அமைந்த பொரளை கோதமி விகாரை, புதிய களனி விகாரை ஆகியவற்றின் ஓவியங்கள் இரண்டு ஓவியப்பாணிகளைப் போன்று இரண்டு வெவ்வேறான மரபுகளையும் பிரதிநிதித்துவப்படுத்துகின்றன.

(i) புதிய களனி விகாரையின் ஓவியங்களுள் புத்த பகவானின் வாழ்க்கைச் சம்பவங்களைச் சித்திரிக்கும் ஓவியம் ஒன்றையும் வரலாற்று ரீதியான ஓவியமொன்றையும் குறிப்பிடுக. (2 புள்ளிகள்)

- **வாழ்க்கைச் சம்பவம்**

  தேவ ஆராதனை
  மகாமாயா தேவியின் கனவு
  சித்தார்த்தர் பிறப்பு
  சித்தார்த்தர் வில்வித்தை பழகுதல்
  சுஜாதா பாற்பிட்டு தானம் செய்தல்
  புத்தராகுதல்
  சித்தார்த்தர் வயல் உழுதல்

- **வரலாற்று நிகழ்வு**

  புத்தர் மகியங்கனைக்கு வருகைதரல்
  புத்தர் களனிக்கு வருகைதரல்
  புத்தர் சிவனொளிபாத மலையில் பாதம் பதித்தல்
  புத்தர் நாகதீபத்திற்கு வருகைதரல்
  விஜயன் இலங்கைக்கு வருகைதரல்
  கேமமாலாவும் தந்தகுமாரனும் புனித தந்த தாதுவை கொண்டுவரல்
  சங்கமித்தை வெள்ளரசு மரக்கிளையைக் கொண்டுவரல்
  திரிபீடகத்தைத் தோற்றுவித்தல்
  சரணங்கதேரருக்கு சங்கராஜபதவியை வழங்குதல்
  போத்துக்கீசர் களனிவிகாரையை அழித்தல்

(ii) ஜோர்ஜ் கீற், கோதமி விகாரையில் ஓவியங்களை வரைவதற்காகத் தெரிவுசெய்த கருப்பொருள்களைச் சித்திரித்துள்ள விதத்தைச் சுருக்கமாக விளக்குக. (5 புள்ளிகள்)

- தேவ ஆராதனையில் இருந்து பரிநிர்வாணம் வரையிலான கருப்பொருளில் ஓவியங்கள் வரைந்துள்ளமை
- கோதமி விகாரையில் தொடர் ஓவியமாக வரையப்பட்டுள்ளன.
- மனித உருவங்கள் கருப்பொருளுக்கேற்றவாறு லயத்துடன் இரேகைகளால் வரையப்பட்டுள்ளன.
- சுதந்திரமான கோடுகளாலும் மெல்லிய தடித்த கோடுகளாளும் புறக்கோடுகள் வரையப்பட்டுள்ளன.
- மஞ்சள் , செம்மஞ்சள், சாம்பல் போன்ற வருணங்கள் ஓவியத்தில் பிரயோகிக்கப்பட்டுள்ளன.
- உட்சுவரில் பின்வரும் ஓவியங்கள் வரையப்பட்டுள்ளன
- கிம்புள்வத் புரத்திற்கு வருகைதரல், துறவு பூணுதல் , மாரனைத் தோற்கடித்தல், பரிநிர்வாணம் அடைதல்.

(iii) பொரளை கோதமி விகாரை, புதிய களனி விகாரை ஆகியவற்றின் ஓவியங்களை அவற்றின் ஓவியப்பாணி, வர்ணப்பயன்பாடு ஆகியவற்றின் அடிப்படையில் ஒப்பிட்டு மதிப்பிடுக. (8 புள்ளிகள்)

- – பொரளை கோதமி விகாரை ஓவியங்களை ஜோர்ஜ்கீட் வரைவதற்கு புத்த சரிதைகளை கருப்பொருனாக கொண்டு வரைந்துள்ளார்.
  – இந்திய கஜுராகோ சிற்பங்களையும் பிக்காசோவின் ஓவியங்களையும் அவதானித்து தனக்கே உரிய பாணியில் வரைந்துள்ளார்.
  – தொடர்ச்சியான ஓவியப் போக்கினைக் கொண்டதாக ஓவியங்கள் வரையப்பட்டுள்ளன.
  – சிவப்பு, கபிலம், மஞ்சள் கலந்த நீலம் ஆகிய வருணங்கள் பயன்படுத்தப்பட்டுள்ளது.
  – சுவர்களின் பிரமாணத்திற்கு ஏற்ப உருவங்களை நேரடியாக வரைந்துள்ளார்.
  – சுதந்திரமான ரேகைகள் கையாளப்பட்டுள்ளன.
  – கோதமி விகாரை ஓவியங்களின் லௌகீகப் பண்புகள் புலப்பட்டாலும் தெய்வீக உணர்வுகளும் வெளிப்படுமாறு வரையப்பட்டுள்ளது.

- – களனி விகாரையில் புத்தசரிதை வரலாற்று சம்பவங்களும் ஜாதகக் கதைகளும் இணைத்து வரையப்பட்டுள்ளன.
  – களனி விகாரையில் ஓவியம் தொடர்பில் சோழியஸ்மென்டிஸ் அவர்கள் அஜந்தா, பாக், எல்லோரா, திவங்கசிலைமனை, நந்தலால்போசின் ஓவியங்கள் ஆகியவற்றை அவதானித்து தனக்கே உரிய பாணியில் வரைந்துள்ளார்.
  – களனி விகாரையில் சோழியஸ்மென்டிஸ் தனித்தனி ஓவியங்களாக வரைந்துள்ளார்.
  – லயம் ரிதம் என்பன வெளிப்படும் வகையில் இரேகைகள் கையாளப்பட்டுள்ளன.
  – மஞ்சள், செம்மஞ்சள் , சாம்பல் , கருப்பு போன்ற வருணங்கள் கூடுதலாக உபயோகிக்கப்பட்டுள்ளது.
  – பிரகாசமான வருணங்கள் இங்கு அதிகமாக பயன்படுத்தாப்பட்டுள்ளன.

**2.** இலங்கையின் கட்டடக்கலை நிர்மாணிப்புகளில் மாற்றத்தை ஏற்படுத்தியதொரு காலமாக கம்பளைக் காலத்தைக் குறிப்பிடலாம்.

(i) கம்பளைக் கால கட்டடக் கலைஞர்கள் **இருவரைக்** குறிப்பிடுக. (2 புள்ளிகள்)

- தெல்மட மூலச்சாரியர்
- கணேஸ்வராச் சாரியார்
- ஸ்தபதிராயர்

(ii) லங்காதிலக விகாரையின் கட்டடக்கலைப் பண்புகளைச் சுருக்கமாக விவரிக்குக. (5 புள்ளிகள்)

- 14 ஆம் நூற்றாண்டில் ஆட்சி செய்த 4ஆம் புவனேகபாகு அரசன் காலத்தில் அமைச்சரான சேனா இலங்காதிகார என்பவரால் அமைக்கப்பட்டது.
- ஸ்தபதிராயர் என்ற இந்திய கலைஞரினால் கட்டப்பட்டதாகும்
- இயற்கையான குன்றின் மீது அமைக்கப்பட்டுள்ளது.
- தென்னிந்திய கட்டட நிர்மாணிப்பின் பண்புகள் ஒன்றிணைந்து காணப்படுகின்றது.
- சுவர்களில் வெளித்தள்ளிய அமைப்புடைய தூண்கள் அமைக்கப்பட்டுள்ளன.
- 96 அடி நீளமும் 78 அடி அகலமும் 80 அடி உயரத்தையும் கொண்டதாகக் காணப்படுகின்றது.
- சுவர்களில் யானை உருவங்கள் வெளித்தள்ளிய பகுதிகள் (பொரதம்) தூண்களினால் அலங்கரிக்கப்பட்டுள்ளது.
- கூரையானது கூராகி சரிந்த நிலையில் சிறு ஓடுகளால் வேயப்பட்டுள்ளது.
- பிரதான நுழைவாயிலின் முன்னால் வேலைப்பாடுகள் அற்ற சந்திரவட்டக்கல் இயற்கைக் கற்பாறையில் நிர்மாணிக்கப்பட்டுள்ளது.
- கதவு நிலையின் மேலே மகரதோரண அலங்காரமும் இருபக்கங்களும் , சிங்க வடிவங்கள் , தோரணத்தைத் தாங்கும் விதத்திலும் காணப்படுகின்றது.
- கம்பளைக்கால துவாரபாலகர் வடிவங்கள் இரண்டு இங்கு காணப்படுகின்றது.
- உள்ளே சமன், விஷ்ணு, உபுள்வன்ன, கதிர்காமக் கந்தன், பிள்ளையார் அத்துடன் கம்பளைக்கால புத்தர் சிலையும் காணப்படுகின்றது.

(iii) “எம்பக்க தேவாலயம் கம்பளைக் காலத்தில் உருவான உன்னதமான கட்டடக்கலை நிர்மாணிப்பைப் போன்று பெறுமதிவாய்ந்த செதுக்கல்களைக் கொண்டதொரு கலைநிலையமாகும்.” ஆராய்க. (8 புள்ளிகள்)

- கி.பி 14 ஆம் நூற்றாண்டில் 3வது விக்கிரமபாகு அரசன் காலத்தில் கதிர்காமத் தெய்வத்துக்காக நிர்மாணிக்கப்பட்டதாகும்
- தெல்மடமூலாச்சாரியின் தலைமையில் அவர்களது சீடர்களினால் நிர்மாணிக்கப்பட்டது.
- நீள்மண்டபம், வாயில் மண்டபம், கர்பக்கிரகம் என்பன வாஸ்த்து முறைப்படி நிர்மாணிக்கப்பது.
- நீள்மண்டபத்தில் 32 தூண்களில் 128 செதுக்கல்கள் காணப்படுகின்றன.
  ($32 \times 4 = 128$) செதுக்கல்கள்
- வாயில் மண்டபத்தில் 10 தூண்களில் 40 செதுக்கல்கள் காணப்படுகின்றன.
- கம்மாலு, சித்திரவேம்பு , நாகமமரம், வேங்கை போன்ற மரங்கள் பயன்படுத்தப்பட்டுள்ளன.
- 26 குறுக்கு வளைகளும் மர ஆணி ஒன்றுடன் பொருத்தப்பட்டிருப்பது சிறப்பம்சமாகும் இதனை “மடொல் குருப்பாவ” என அழைப்பர்
- சிறுபுடைப்பு குறைப்புடைப்பு நுட்பமுறையில் சட்டகங்களுக்குள் செதுக்கல்கள் இடம்பெற்றுள்ளன.

- சட்டகங்களின் விளிம்புகளில் குந்திரிக்கன் அலங்காரம் செதுக்கப்பட்டு அதனுள் கம்பளைக்கால பாரம்பரிய கலாச்சார வெளிப்பாடுகளைக் கொண்ட செதுக்கல்கள் காணப்படுகின்றன.
  உதாரணம் :- மல்யுத்த வீரர் ,நடனமாது, கின்னரப்பெண் , பாலூட்டும் தாய், ரபானா அடித்தல், ஹம்சபூட்டுவ , பினரமலர், போர்வீரன்
- இலங்கையில் உள்ள பிரசித்தி பெற்ற மரச்செதுக்கல் உள்ள இடமாகவும், கலைஞர்களின் திறமையை வெளிப்படுத்தும் உன்னத படைப்பாகவும் இது காணப்படுகின்றது.

**3.** அனுராதபுரக் காலத்திலும் பொலன்னறுவைக் காலத்திலும் சமய, அரச பரம்பரைக் கட்டடங்களுடன் தொடர்புடைய நிர்மாணிப்புகள் படிப்படியாகப் பரவலடைந்துள்ளன.

(i) அனுராதபுர, பொலன்னறுவைக் காலங்களில் நிர்மாணிக்கப்பட்ட பட்டிமாகர ஒவ்வொன்றைக் குறிப்பிடுக. (2 புள்ளிகள்)

**அனுராதபுர பட்டிமாகர**
- அவுக்கண
- மெதிரி கிரிய
- ஜேதவன ராம

**பொலனறுவை பட்டிமாகர**
- தூபாராம
- திவங்கபிலிமகே
- லங்காதிலக பிலிமகே

(ii) 'நில்லக்கம' போதிமனையின் கட்டடக்கலைப் பண்புகளைச் சுருக்கமாக விளக்குக. (5 புள்ளிகள்)

- கலை அம்சம் கொண்டது
- குருனாகலில் நில்லக் கம கிராமத்தில் உள்ளது.
- கி.பி. 8ம் நுற்றாண்டைச் சேர்ந்ததாக பரண விதான கூறுகிறார.
- கல்லினால் நிறுவப்பட்டுள்ளது
- கதவு நிலை, என்பன கல்லினால் ஆக்கப்பட்டுள்ளது.
- அடித்தளம் சதுர அமைப்புடையது.
- இரண்டு வாயில்களைக் கொண்டது
- இரண்டு மேடைகள் உள்ளன. 1வது மேடையில் அரச மரம் இருந்திருகக்லாம் என நம்பப்படுகிறது.
- கதவு நிலைச் சட்டத்தில் பாம்பு, சிங்கம் , கொடி அலங்காரம் செதுக்கப்பட்டுள்ளது, இக்கொடி அலங்காரம் அநுராதபுர இராணி மாளிகையின் சந்திர வட்டக்கல் கொடி அலங்காரத்தை ஒத்தது. போதி மரத்தைச் சுற்றி காணப்படும் மேடையின் வெளிச்சுவரில் கேசரிசிங்க வடிவங்கள் அரைப்புடைப்பு நுட்பத்தில் செதுக்கப்பட்டுள்ளது.
- கீழ்ச் சுவரில் யானை உருச் செதுக்கல்கள் காணப்படுகிறது.

(iii) அனுராதபுரக் காலத்திலும் பொலன்னறுவைக் காலத்திலும் காணக்கிடைக்கும் காவற்கல், சந்திரவட்டக்கல் ஆகியன பற்றி ஒப்பீட்டுரீதியாக மதிப்படுக. (8 புள்ளிகள்)

- அனுராதபுரக் காலத்து காவற்கல்லில் சிறந்தது இரத்தின பிரசாத காவற்கல் ஆகும். சிறந்த சந்திர வட்டக்கல், மகாசேனன் மாளிகை / இராணி மாளிகை சந்திர வட்டக்கல் ஆகும்.
- பொலனறுவைக் காலத்து சிறந்த காவற்கல் வட்டதாகே காவற்கல் ஆகும். சிறந்த சந்திர வட்டக்கல்லும் , வட்டதாகே சந்திரவட்டக்கல் ஆகும்.
- அனுராதபுர சந்திர வட்டக்கல்லில் வெளித் தோற்றம் அரை வட்டவடிவமுடையது பொலன்நறுவைக்கால சந்திர வட்டக்கல்லின் வெளித்தோற்றம் அரை வட்டத்தை விட சற்று அதிகரித்து காணப்படுவதுடன் நீள் சதுர கற்துண்டு சேர்க்கப்பட்டுள்ளது.
- அனுராதபுர காலத்து சாந்திர வட்டக்கல்லில் செதுக்கப்பட்டுள்ள விலங்குகள் ஒரே வரிசையில் ஒன்றன் பின் ஒன்றாக செல்வது போல் காணப்படுகின்றன. பொலனறுவைக் காலச் சந்திர வட்டக்கல்லில் விலங்குகள் தனித்தனியே வரிசையில் செதுக்கப்பட்டுள்ளது.
- ஆனுராதபுர சந்திர வட்டக் கல்லில் எருது, சிங்கம், யானை, குதிரை போன்ற விலங்குகள் சேர்க்கப்பட்டுள்ளன இவ் விலங்கு உருவங்களில் எருது உருவம் இந்து மத செல்வாக்கின் காரணமாக பொலனறுவை சந்திர வட்டக்கல்லில் இருந்து நீக்கப்பட்டுள்ளது. பிற்காலத்தில் சிங்க உருவமும் நீக்கப்பட்டு குதிரை, யானை உருவம் மட்டும் சேர்க்கப்பட்டன.
- அனுராதபுரக் காவற் கல்லில் மேல் வளைவில் செதுக்கல்கள் காணப்படுகின்றது. இருபக்க தூண்களின் மேல் உள்ள மகரங்களின் வாயிலில் இருந்து வெளிப்படும் அலங்கரிப்பில் இளம் ஜோடியும் குள்ளவடிவமும் செதுக்கப்பட்டுள்ளது.
- பொலன்னறுவைக்கால காவற்கல்லில் மேல் வளைவில் செதுக்கல் ஏதும் இன்றி மளிங்காகக் காணபப்டும்
- அனுராதபுதர காவற்கல் உயிரோட்டமானதாகவும் லயத்துடன் கூடியதாகவும் மென்மையான செதுக்கு வேலைப்பாடுகள் கூடியதாகவும் காணபப்டுகின்றது ஆடை, ஆபரணம் நுணுக்கமாகக் காட்டப்பட்டுள்ளன.
- பொலன்னறுவைக் காவற்கல் உயிரோட்டம் குறைவாகவும் கரடுமுரடான செதுக்கல் கொண்டதாகவும் காணப்படுகிறது.
- ஆடை, ஆபரணங்கள் நுணுக்கமாக காட்டப்படாத தன்மை காணப்படுகின்றது.
- பொலன்னறுவைக் காலக் காவற் சிலையில் நாகராஜா துவாரபாலகனின் காலின் கீழ் இரு குள்ள உருவங்கள் செதுக்கப்பட்டுள்ளன.
- அனுராதபுர காவற்கல்லில் ஒரு குள்ள வடிவம் மட்டுமே காணப்படுகின்றது.

## பகுதி 'ஆ'
## (சித்திரக்கலையின் மதிப்பீடும் இரசனையும் - இந்தியா)

**4.** மகாயான பௌத்தத்தைத் தழுவிக்கொண்ட குஷாணர்களின் அனுசரணையில் உருவான காந்தாரக் கலை, வெளிநாட்டுக்கலை மரபுகளின் கலவையுடன் தோன்றியதொரு பௌத்த கலை மரபாகும்.

(i) காந்தாரக் கலைஞர்களால் நிர்மாணிக்கப்பட்ட நின்றநிலைச் சிலையொன்றையும் செதுக்கலொன்றையும் குறிப்பிடுக. (2 புள்ளிகள்)

**நின்ற நிலைச்சிலை**
- பிரேகம் புத்தர் சிலை
- ஹோர்ட்டி மந்தார் புத்தர்சிலை

**செதுக்கல்**
- சித்தார்த்தர் பிறப்பு
- மாரயுத்தம்
- மாயாதேவியின் கனவு
- பரிநிர்வாணம் அடைதல்

(ii) 'ஹோர்ட்டிமந்தார்' சிலை பற்றிச் சுருக்கமாக அறிமுகம் செய்க. (5 புள்ளிகள்)

- காந்தார தேசத்தில் பிறேசாவோர் பிரேதேசத்தில் ஹோர்ட்டிமந்தார் என்னும் இடத்தில் கண்டெடுக்கப்பட்ட சிலையாகும். இச்சிலையில் முகம், தலை அப்பலோ தெய்வத்தின் முகத்திற்கு ஒப்பானது. தலையில் உச்சிக் குடுமி காணப்படுகின்றது. புத்தருக்கு காணபட்டுகின்ற அனைத்து அம்சங்களும் இச்சிலையில் காணபட்டுகின்றது. அத்துடன் டோகா எனப்படும் தடித்த ஆடை அமைப்பும் நெற்றிப் பொட்டும் காணப்படுகின்றது.
  கிரேக்க அப்பலோ தெய்வத்தின் (சூரிய தேவன்) தலைக்கேச அமைப்பை ஒத்ததாக காணப்படுகின்றது. கருணை ,தெய்வீகம், சாந்தம் , சற்றுதிறந்த கண் , புன்சிரிப்புடன் கூடிய உதடு. என்பன இலட்சணங்களாகக் காணப்படுகின்றது. உயர்ந்த குணப்பண்புகளைக் கொண்ட சிலையாக இது சிறப்புப் பெறுகின்றது.

(iii) "காந்தார புத்தர் சிலைகளின் தோற்றத்தில் தாக்கம் செலுத்திய வெளிநாட்டுச் செல்வாக்குகள் சமகால குருகுலமான மதுரா கலைஞர்களிடத்தில் காணக்கிடைக்கவில்லை." உதாரணங்களுடன் விளக்குக. (8 புள்ளிகள்)

- காந்தார தேசத்தில் புத்தர்சிலைகள் ஆரம்பிக்கப்பட்ட போது கிரேக்க உரோம செல்வாக்குகள் உள்வாங்கப்பட்டிருந்ததை காணமுடிகின்றது .
- புத்தர் சிலையின் முகம் கிரேக்க அப்பலோ தெய்வத்தின் முகத்திற்கு ஒப்பானது .
- சிலையின் தலைகேசம் கிரேக்க சூரிய தெய்வத்தின் தலைக்கு ஒப்பானதாக காணப்படுகின்றது .
- ஆடையானது கிரேக்க அதிபதிகளின் ஆடைகளுக்கு ஒப்பானதாகக் காணப்படுகின்றது.
- மதுரா கலைஞர்களால் முதன்முதலில் உருவாக்கப்பட்ட புத்தர் சிலை கத்ரா புத்தர் சிலையாகும்
- மதுரா நின்ற நிலை புத்தர் சிலை யமால்பூர் நின்ற நிலை புத்தர் சிலையாகும்.
- இச்சிலையில் புத்தருக்குரிய அனைத்து உயர்குணப்பண்புகளும் ஒன்றாகச் சேர்ந்து காணப்படுகின்றது.
- புத்தருக்குரிய மகா புருஷ இலட்சணம் காணப்படுவதோடு தலைக்கேசம் வண்டு போன்று சுருளுடனும் உச்சிக்கு குடுமியின் மேல் உள்ள தீச்சுடர் அமைப்பு( உன்னீசியம்) , நீண்டகாதுகளுடனும் காணப்படுகின்றது
- உடலின் உறுப்புக்கள் தெரியக்கூடியவாறான ஆடை அமைப்பு காணப்படுகின்றது.

**5.** பல்லவப் பேரரசின் ஆட்சியைக் கைப்பற்றிய சோழர்களால், அதன் கட்டக்கலையும் சிற்பக்கலையும் முன்னோக்கிக் கொண்டுசெல்லப்பட்ட போதிலும், பிற்காலத்தில் சோழ நிர்மாணிப்புகளில் பல்லவ, சோழ கலைப் பண்புகளின் கலப்பினைக் காணத்தக்கதாக இருந்தது.

(i) பல்லவர்களின் கலைமரபுக்குரிய கட்டடக்கலை நுட்பமுறைகள் **இரண்டைப்** பெயரிடுக. (2 புள்ளிகள்)

- குடைவரைகோயில்
- தனிக்கற் கோயில்
- கற்றளிகள்

(ii) 'ஆகாயகங்கையின் இறக்கம்' என்ற செதுக்கலில், கலைஞர் பாறையின் இயற்கையான அமைப்பை நுட்பமாகக் கையாண்டுள்ள விதத்தைச் சுருக்கமாக விவரிக்குக. (5 புள்ளிகள்)

தமிழ் நாடு மானிலத்தில் மாமல்லபுரத்தில் அமைந்துள்ள இயற்கைக் கற்பாறையை ஆதாரமாகக் கொண்டு புடைப்புச் செதுக்கல் மூலம் கங்கையின் தரைஇறக்கத்தைச் சித்தரித்துள்ளார். இது கி.பி. 7நூற்றாண்டின் ஆரம்பகாலத்தை சேர்ந்தது.

செதுக்கலின் நடுப்பகுதியை கங்கையாகப் பாவித்து அது ,கீழ்நோக்கிப் பாய்வதாக அமைக்கப்பட்டுள்ளது பகீரதன் எனும் முனிவர் தவம் செய்து சிவபெருமானிடம் வேண்டி ஆகாயத்தில் இருந்த கங்கை நதியை பூமிக்கு வரவழைத்த கதையை இதில் சித்திரிக்கின்றது. பாறைகளின் ஒரு புறத்தில் பெரிய யானைகளும் அதனுடாக நிற்கும் சிறிய யானைக்குட்டியும் இயல்பாக செதுக்கப்பட்டுள்ளது.

நீருக்கு அண்மையில் நாக கன்னிகளின் உருவம் செதுக்கப்பட்டுள்ளது. தவம் செய்யும் முனிவர்களும் கங்கையை எதிர்பார்த்துக் கொண்டிருக்கும் தேவர்களும் உருத்திராக்கப்பூனையும் அதன் கால்களிடையே சுண்டெலியும் குரங்குக் குடும்பம் என்பவையும் மிக இயல்பாக மாமல்ல புரச்செதுக்கல்களில் காணப்படுகின்றன.

(iii) பல்லவ, சோழ கட்டடக்கலை நிர்மாணிப்புகளில் ஒவ்வொன்றைப் பெயரிட்டு, அவற்றின் நிர்மாணிப்பு மாதிரி, கட்டமைப்பு என்பன பற்றி ஒப்பீட்டுரீதியில் பகுப்பாய்க. (8 புள்ளிகள்)

- **பல்லவர் கட்டடக்கலை**
  - பஞ்சபாண்டவர் ரதம்
  - திரோபதி ரதம்
  - அரிச்சுணன் ரதம்
  - வீமன் ரதம்
  - தர்மன் ரதம்
  - சகாதேவ ரதம்
  - கடற்கரைக்கோயில்
  - மஹிஷாசுர மர்த்தினி குகை

- **சோழர் கட்டடக்கலை**
  - இராஜராஜேஸ்வரன் கோயில் (தஞ்சை பெருடையார் கோயில்)

**பஞ்சபாண்டவர் ரதம்**

**திரோபதி ரதம் -**

மாமல்லபுர ரதத்தொகுதியில் உள்ள ரதங்களுள் எளிமையான ஆலயமாகும். இதன் கூரையானது பழைமையான ஒலைக்கூரை போன்று செவ்வகத்திலிருந்து மேல்நோக்கி கூரான அமைப்பில் அமைக்கப்பட்டுள்ளது. வேலைப்பாடுகள் குறைந்த ரதமாகும் .

**அரிச்சுணன் ரதம் -**

திரோபதி ரதத்திற்கு அண்மையில் அமையப்பெற்றுள்ளது. சதுர அடித்தளத்தைக் கொண்டது. கூம்புவடிவக் கூரையையும் எண்கோண வடிவ சிகரத்தையும் கொண்டது.

**வீமன் ரதம்**

இரண்டு அடுக்குகளை கொண்ட இவ் ஆலயம் செவ்வகவடிவமானது. உச்சியில் முக்கோண வடிவமுடைய தோனியை கவிழ்த்தது போன்ற கூரையை உடையதாகும்

**தர்மன் ரதம்-**

அர்ச்சுணன் ரதத்தை விட சற்றுப் பெரியதாகும் வேலைப்பாடுகள் அதிகளவு கொண்டதாகும்

**சகாதேவ ரதம்-**

செவ்வக வடிவமான இரண்டு அல்லது இரண்டுக்கு மேற்பட்ட அடுக்குகளைக் கொண்டது .ஏனைய ரதங்களில் இருந்து சற்று தூரமாகக் காணப்படுகின்றது. தனிக்கல்லில் செதுக்கப்பட்டுள்ளது. வட்டவடிவமான சிற்றறைகள் இங்கு காணப்படுகின்றன.

**கடற்கரைக்கோயில்-**

பல்லவர் கட்டட நிர்மாணத்தில் கட்டப்பட்ட கோயிலாகும் தென்னிந்திய கட்டடக்கலையின் ஆரம்பக்காலத்தில் இது கட்டப்பட்டது. கி.பி 8 ஆம் நூற்றாண்டை சேர்ந்ததாகும். எண்கோண சிகரம் கும்பக வடிவக் கூரை என்பன இதன் இலட்சனங்களாகும், சிகரம் தனிக்கருங்கலினால் ஆனது. கடலை நோக்கியவாறு பிரதானவாயில் காணப்படுகின்றது. கல்லைவெட்டி இக்கோயில் கட்டப்பட்டுள்ளது

**மஹிஷாசுர மர்த்தினி குகை**

இக்குகை வாஸ்து சாஸ்திரமுறையில் நிர்மாணிக்கப்பட்டதாகும். கல்லைக்குடைந்து இக்கோயில் நிர்மாணிக்கப்பட்டுள்ளது. துர்க்கையால் . மஹிஷாசுரன் வதம் செய்யப்படுகின்ற காட்சி சிற்பமாக செதுக்கப்பட்டுள்ளது. அங்க சலன அசைவுகள் சிறப்பாக காட்டப்பட்டுள்ளன

**இராஜராஜேஸ்வரன் கோயில் ( தஞ்சைப் பெருடையார் கோயில் /பிரகதீஸ்வரர் ஆலயம் )-**

சோழர் கட்டடக் கலையின் அதிசிறந்த படைப்பாக தஞ்சைப்பெருங்கோயில் விளங்குகின்றது இராஜராஜசோழனினால் இக்கோயில் கி.பி 10 ஆம் நூற்றாண்டில் கட்டப்பட்டுள்ளது. எதிரிகளில் இருந்து கோயிலை காப்பதற்காக கோயிலை அண்டியதாக பெரும் அகழிகள் கட்டப்பட்டுள்ளன. தனிக் கருங்கற்களைப் பயன்படுத்தி இக்கோயில் கட்டப்பட்டுள்ளது. தனிக் கல்லினால் ஆன பாரிய சிகரமும், கற்பகிரகமும் இடைமண்டபம் வெளிமண்டபம் ஆகிய கட்டடத்தொகுதிகளை உள்ளடக்கியது கோயிலுக்கு முன்னால் தனிக் கல்லினால் ஆன நந்தி ஒன்றும் செதுக்கப்பட்டுள்ளது கோயில் கருவறையில் 12 அடி உயரமான சிவலிங்கம் ஒன்றும் காணப்படுகின்றது .

பகுதி ‘இ’

(சித்திரக்கலையின் மதிப்பீடும் இரசனையும் - ஐரோப்பா)

**6.** 20 ஆம் நூற்றாண்டில் உருவான கலைப்பாணிகளில் கனவடிவவாதத்தின் பின்னர் உருவான புதிய கலைப்பாணி அரூபவாதமாகும்.

(i) அரூபவாதக் கலைஞர் ஒருவரையும் அரூபவாதக் கலைப்படைப்பொன்றையும் குறிப்பிடுக. (2 புள்ளிகள்)

- வெஸ்லி கன்தின்ஸ்கி (Wassily Kandinsky)
- ஜக்ஷன் பொலொக் ( Jakson Pollock)
- பியோத்மொன்றியன் ( Pietmontrian)
- போல் க்ளீ (Poul klee)
- மார்க் றொஸ்கோ (Mark Rosthko )

**வெஸ்லி கன்தின்ஸ்கி** (Wassily Kandinsky)

ஒழுங்கமைப்பு

சிறப்பான வகையில் வெளிப்படுத்தப்பட்ட கோணம் .இலக்கம் 247

**ஜக்ஷன் பொலொக்** ( Jakson Pollock)

மியுரஸ், மஞ்சள் தீவு , நம்பர்-12

**பியோத்மொன்றியன்** ( Pietmontrian)

மஞ்சள் , கருப்பு நீலம் சிவப்பு வர்ணங்களை ஒன்றிணைத்தல்

**போல் க்ளீ** (Poul klee)

முள்மாலை தரித்த சுயபிரதிமை ஓவியம்

மீன் மெஜிக்

சென்சியோ

பிள்ளையின் அர்ப்பணிப்பு

கீச்சிக் கீச்சிடும் மெசின்

**மார்க் றொஸ்கோ** (Mark Rosthko )

இலக்கம் 61

ஒரேஞ் என்ட் ஜெலோ (காவியும் மஞ்சளும்)

ஒரேஞ், றெட் , ஜெலோ (காவி , சிவப்பு மஞ்சள்)

(ii) "ஜோர்ஜ் பிராக் கனவடிவவாதத்தைத் தோற்றுவித்த முன்னோடியாவார்." சுருக்கமாக விளக்குக. (5 புள்ளிகள்)

- பிறான்ஸ் நாட்டில் பிறந்தார் கியூபிசத்தை அறிமுகம் செய்தவர்
- வேகமான தூரிகை வீச்சுக்களை கொண்ட ஒவியப் பாணி
- பிக்காசோவுடன் சமகாலத்தில் வாழ்ந்த ஒவியர்.
- பிக்காசோவை போன்று கனவடிவ எண்ணக்கருக்களை மீண்டும் மீண்டும் புதிய ஆய்வுகளை நடாத்திய கலைஞர் ( Analitic cubism)
- கட்புல நோக்குருக்களை அவ்வாறே அனுசரிக்காமல் கேத்திர கணிதப் பண்புகளின் மாறுபட்ட வெளிப்பாட்டைக் கொண்டதாக வரைந்துள்ளார்.
- இவரின் ஒவியங்கள் ஆவன
  வீடும் மரங்களும்
  மனிதனும் கிட்டாரும்
  பாதங்களுடன் கூடிய மேசை (பீட மேசை)

(iii) கனவடிவவாதத்துக்கும் அரூபவாதத்துக்கும் இடையிலான **நான்கு** வேறுபாடுகளை உதாரணங்களுடன் விளக்குக. (8 புள்ளிகள்)

**கனவடிவவாதம்**

- உருவங்களை கேத்திரகணித வடிவங்களின் தொகுப்பாக வரைதல்
  உதாரணம் – குவர்ணிக்கா , வயலினும் திறாட்சைப்பழமும், மாடிப்படிகளில் கன்னி
- உருவ சிதைப்புகள் காணப்படும்
- ஒரு கோணத்தில் அன்றி பல்வேறு கோணங்களில் பார்வைப்புலத்தை செலுத்துகின்ற ஒவியப்பாணி
- கட்டமைப்பில் சிக்கலான இயல்பை கொண்டிருத்தல்.
- கட்புல நோக்கு இயல்பை அவ்வாறே அனுசரிப்பதற்கு பதிலாக கேத்திரக் கணித வடிவங்களின் மாறுபட்ட வெளிப்பாட்டை வெளிப்படுத்தி இருக்கும்.

**அரூப வாதம்**

- உருவங்களை நேரடியாக பிரதிபலிக்காது அரூப அமைப்பில் கோடுகளாலும் வருணங்களாலும் வெளிப்படுத்துவது
  உதாரணம் :– மஞ்சள், நீலம் , சிவப்பு வருணங்களின் ஒருங்கிணைப்பு
- வருணங்களின் பிரதிபலிப்புகளும் வர்ணச்சிதறல்களும் உணர்வுகளை வெளிப்படுத்துவனவாக அமையும்
  உதாரணம் :– ஒழுங்கமைப்பு
- இது கட்புலக் கலை சார்ந்தது
- கருப்பொருளை விளங்கிக் கொள்வது கடினமாகும்
- இது இரண்டு போக்குகளைக் கொண்டது
- இயற்கையில் உள்ள கட்புல நோக்கல்களை எளிமையாக்கப்பட்டு ஓவியமாக சித்தரித்தல்
- மற்றது மனதில் உருவாகிய அரூப வடிவங்களின் துணையுடன் ஓவியத்தை ஒழுங்கமைத்தல்.

7. கிரேக்க பாணியைப் பின்பற்றிப் போஷிக்கப்பட்ட உரோமக் கலையினால் ஐரோப்பாவில் புதியதொரு கலாசாரத்தை உருவாக்க முடிந்தது.

(i) கிரேக்க பண்டையகால சிலைகள் **இரண்டைக்** குறிப்பிடுக. (2 புள்ளிகள்)

- ஹேர்மிசும் டயோணியசும்
- பரிதிவட்டம் விசுபவர்
- ஈட்டி எறிதலுக்கு தயாராகும் விளையாட்டு வீரர்
- அதீனா தேவகன்னி
- தேவகன்னி மூவர்

(ii) ஜூலியஸ் சீசரின் மார்பளவுச் சிலை, உரோமக் கலைஞர்களால் உருவான பெறுமதிவாய்ந்ததொரு நிர்மாணிப்பாகும். அதன் கலைப்பண்புகளைச் சுருக்கமாக விளக்குக. (5 புள்ளிகள்)

- கி.மு 50க்கு முன்னர் நிர்மாணிக்கப்பட்டது.
- இது மார்பளவு சிற்பமாகும்
- ஏகாதிபத்திய பண்புகள் இன்றி சாதாரண மனித பண்புகள் நிறைந்து காணப்படுகின்றது .
- வயதுக்கு ஏற்றவகையில் முகத்தின் அவயங்களை மென்மையாகவும் சுருக்கங்களுடனும் நிர்மாணித்துள்ளனர்.
- முகத்தில் தீர்க்கமான , உணர்வு பூர்வமான பார்வை, கம்பீர தோற்றம் என்பன வெளிப்படுத்தப்பட்டுள்ளன.
- சலவைக்கல் ஊடகத்தினால் நிர்மாணிக்கப்பட்டுள்ளது.
- தனிநபர்களின் பிரத்தியேக மற்றும் உள்ளார்ந்த குணவியல்புகளும் மெய்யான வடிவில் வெளிப்படுத்தப்பட்டிருத்தல்.

(iii) கிரேக்கத்தின் 'ஹேர்மிசும் டயோணிசியசும்' சிலைக்கும் உரோம 'ஒகஸ்டஸ்' சிலைக்குமிடையிலான ஒத்த தன்மைகள் **இரண்டையும்** வேறுபாடுகள் **இரண்டையும்** விளக்குக. (8 புள்ளிகள்)

**ஒற்றுமை**

- பாற்கல் / சலவைக்கல் பயன்படுத்தப்பட்டுள்ளது.
- உடலின் அங்க இலட்சணங்களின் வெளிப்பாடு.
- வலது காலுக்கு பாரத்தைக் கொடுத்து இடது காலை இலகுவாக்கி இருக்கும் தன்மை.
- வலது கரம் மேலேதூக்கியவாறு அமைக்கப்பட்டுள்ளது.
- இடது கரம் கீழ்நோக்கிய தன்மையிலும் காணப்படுகின்றது.

**வேற்றுமை**

- ஹேர்மிசினுடைய முகத்தில் தெய்வீக தன்மை காணப்படுதல் .
- ஒகஸ்டசின் முகத்தில் அரசனுக்குரிய கம்பீரம் காணப்படுகின்றது
- ஹேர்மிஸ் ஆடையற்று நிர்வாணமாகக் காணப்படுகின்றார்
- ஒகஸ்டஸ் சிலையில் முழுமையாக போருக்குரிய உடைகள் காணப்டுகின்றது .
- ஹேர்மிசின் சிலையில் நளினமான நிலை அதியுச்சபட்சத்தில் காணப்படுகின்றது.
- ஒகஸ்டஸ் சிலையில் நளினத்தன்மை குறைவாக காணப்படுகின்றது.
- ஹேர்மிஸ் இடது கையில் சிறு குழந்தையை தாங்கியவாறு காணப்படுகின்றார் .
- ஒகஸ்டஸ் உடைய வலது கை ஏதோ ஒன்றை சுட்டிக்காட்டியவாறும் இடதுக் கை கோலைப்பிடித்தவாறும்
  ஆடையையும் பிடித்தவாறும் வலது பாதத்தின் கீழ் ஒரு சிறிய தேவதை ஒன்றும் காணபப்டுகின்றது.